    

ஸ்ரீமதபர்யாப்தாம்ருத பரபரஹ்மணே நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# ஸ்ரீதேசிக பக்திதத்வம்

(திருக்குடந்தை வித்வான் K ஆராவமுதய்யங்கார் எழுதியது)

திருப்பதியில்வாழும் ஸ்ரீ உவே. D. T. தாதாசாரியர் ஸ்வாமிக்கும் காஞ்சீபுரத்தில் வாழும் ஸ்ரீ உவே. அண்ணங்கராசாரியர்ஸ்வாமிக்கும் பல வருஷங்களாக ஓயாத விவாதம் நடந்துகொண்டிருக்கிறதென்பதை உலகமெல்லா முணரும். இந்த விவாதங்களை ஆதியிலிருந்து அடியேன் ஒன்றுவிடாமல் ஊன்றிக் கவனித்து வருகிறேன். இருவர் மூலமாகவும் வெளிவருகின்ற சர்ச்சைகளை விநோதமாகப் பார்த்துக்கொண்டிருப்போமென்று இதுவரையில் பார்த்துக்கொண்டேயிருந்தேன். இப்போது இந்த விவாதத்தில் அடியேன் அவசரத் தலையிடுகிறேன்.

இளமையில் ஒரு ஸுபாஷிதம் கேட்டிருக்கிறேன்; அதாவது, "**यद्यपि न काऽपि हानिः परकीयां चरति रासभे द्राक्षाम्। अनुचितमिदमिति मत्वा हाहा हाहेति दूयते चेतः ॥**" என்பது. ஒருகழுதையானது ஒரு வழிப்போக்கனுடைய திராக்ஷைக்

கொல்லையில் புகுந்து அங்குள்ள த்ராக்ஷைப்பழங்களை மேய்ந்துகொண்டிருந்ததாம். அதையொருவன் கண்டானும். அக்கழுதையின் செய்கையினால் இவனுக்கு யாதொரு நஷ்டமுமில்லை. இவனுடைய கொல்லையன்று; இவனுடைய பந்துக்களின் கொல்லையுமன்று. யாரோ வொருவழிப்போக்கனுடைய கொல்லையாதலால் அதை மேய்வதனால் இவனுக்கு யாதொரு நஷ்டமுமில்லை யென்பது உண்மை. ஆனாலும், திராக்ஷைப்பழங்களைத் தின்பதற்கு இட்டுப்பிறவாத வொருகழுதை அப்பழங்களை மேய்கிறதென்றால் அதைப்பார்த்துக்கொண்டிருக்க இவன் மனம் ஸஹிக்கவில்லையாம். கல்லையும் கம்பையும் விட்டெறிந்து அதைத் துரத்தியடிக்கத் தொடங்கினானும். ஐயோ! இது என்ன அநியாயமான செயல்! கழுதையா திராக்ஷையை மேய்வது! அதையா நாம் பார்த்திருப்பது! என்று மனம் தவித்தானும். இதுதான் மேலெடுத்துக் காட்டிய ச்லோகத்தில் சொல்லப்படும் விஷயம்.

இதனால் தெரிவதென்ன? அநுசிதமானவொரு காரியம் நடந்தால் அதுகண்டு பொறுத்து வாளாவிருக்க விவேகிகளால் முடியாதென்பதே. அடியேன் தேசிகஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவனே. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தேசிக பக்தர்களின் மனம் புண்படும்படியாகப்பல விஷயங்களை யெழுதிவருவதைக்கண்டு வருத்தங்கொள்பவனேயடியேன். D. T. தாதாசாரியர்ஸ்வாமி இவர்க்கு எதிராக எது எழுதினாலும் அதையெல்லாம் ஆமோதிக்கவும் கடமைப்பட்டவனேயடியேன். ஆனால் வழியல்லாத தவறுவழியில் சென்று களேபரம் செய்வதில் அடியேனுக்கு ருசி கிடையாது. அண்ணங்கராசார்ஸ்வாமி எது எழுதினாலும் பிரமாணங்களையும் உபபத்திகளையும் நிறைத்து எழுதுகிறவரேயொழிய வீண்வம்புச்சண்டையாக எழுதுவதில்லையென்பது எல்லாருடைய மனதுக்கும்

தெரிந்ததே. அதற்கு பதில் எழுதவேணுமானால் யோக்ய மான வழியில்தான் எழுதவேணும். 'நாம் சளைக்கவில்லை, நாமும் ஏதோ பதில் மூச்சு போட்டுக்கொண்டேயிருக் கிறோம்' என்று செய்யும் காரியமானது அதிக நாள் ஓடாது. ஒருவருடைய மனதுக்கும் த்ருப்தியளிக்காது. ப்ராமாணிகர்களாயிருப்பவர்கள் அண்ணங்கராசார்ஸ்வாமி யிடத்தில் க்ஷமையை வேண்டுகிறவர்களாகவேயன்றோ முடிந்து நிற்கிறார்கள். தாதாசார்ஸ்வாமியோ மற்று முள்ள பண்டிதர்களோ நேரானவழியில் நின்று பதிலெழு தாமல், விஷயத்தை விட்டு விலகிச் சென்று துர்ப்பாஷை களைப் பிரயோகித்து அதனாலேயே தாங்கள் வெற்றி பெறப்பார்க்கிறார்கள். இது ஒவ்வொருவருடைய மனமும் அறிந்த விஷயம்.

தாதாசாரியர்ஸ்வாமி இரண்டொரு வருஷங்களுக்கு முன்பு தம்முடைய வியாஸங்களில் நிந்தைகளை அதிக மாகப்புகவிடாமல் பாகவதாபசாரத்திற்கு மிகவும் அஞ்சின வராகவே ஒருவாறு எழுதிவந்தார். அப்படி வந்தவர் தம் முடைய ஸ்வபாவத்தை அறவே மாற்றிக்கொள்ளத்தலைப் பட்டார். அதன் காரணத்தையும் அவரே ஸூசிப்பித் திருக்கிறார். அதாவது, அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின் சிஷ்யரொருவர் எழுதின ஒடும்புள்ளேறி விமர்சமாகிய ஸௌஜந்ய ஸௌரபமென்னும் க்ரந்தத்தில் தாதாசார்ய ஸ்வாமியை ப்ரஸ்தாவித்து "உண்மையாக இவரிடத்தில் ஒரு பெருமையுண்டு; இதரர்களைப்போல் வீணான வ்யக்தி தூஷணைகளைப் பொழிந்து அருவருப்புக்கு இலக்காவ தில்லையிவர்" என்று எழுதிவிட்டு, உடனே "ஆனால் இவர் தலையிடத்தகாத விஷயங்களில் தலையிட்டுத் தம்முடைய ஞானத்தின் மதிப்பை மிகவும் குறைபடச்செய்துகொள்ளு கிறாரென்பதொன்றுமாத்திரம் சோசநீயம். ரகுவம்சம் குமாரஸம்பவம் மேகஸந்தேசம் போன்ற நூல்களில் விமர்

சங்களைச் செய்து போருவது யுக்தம். தமக்கு நிலமல்லாத உபய வேதாந்த ரஹஸ்யசர்ச்சைகளில் தலையிட்டு ஏதையாவது எழுதுவதனுல் இவருடைய மதிவிபர்யாஸம உலகுக்கு எடுத்துக்காட்டவேண்டியதாகிறது; இது இவர்க்கு ஸ்வயங்க்ருதானர்த்தமென்னத் தகும்'' என்று எழுதியிருக்கிருர். தம்மை ஸர்வதந்த்ர ஸ்வதந்திரராக நினைத்துக் கொண்டிருக்கிறவிவர்க்கு அது அஸஹ்யமான துக்கத்தையோ அவமானத்தையோ உண்டாக்கிவிட்டதென்று அன்று முதலாக இந்த தாதாசார்ஸ்வாமி வசைமாலைகளை வர்ஷிக்க ஆரம்பித்துவிட்டார். சர்ச்சைக்கு வந்திருக்கிற விஷயங்களுக்கு பதில் எழுதவேண்டியது அவச்யமாயிருக்க அதைவிட்டு, அண்ணங்கராசாரியர் தேசிகத்வேஷி யென்றும், தேசிக பக்தி கொண்டவராகக் கபட நாடகம் போடுகிருரென்றும், அந்த கபட பக்தியினுல் உலகை வஞ்சிப்பதற்காக அவர் எழுதி வெளியிட்டிருக்கிற ஸ்ரீமத் வேங்கடநாதகுரு ஸ்தோத்ரத்தைக்கண்டு யாரும் மயங்கக்கூடாதென்றும் இவ்வழிகளிலே தம்முடைய ப்ரஸங்கங்களை ப்ரபலப்படுத்திவருகிருர் தாதாசார்ஸ்வாமி. தேசிகனை தெய்வமாகக் கொண்டாடுகிற பக்தர்களில் தம்மைத் தலைவராகவும் மிதம்மிஞ்சி எழுதிக்கொள்ளுகிருர்.

இத்தாதாசார்யஸ்வாமியின் தேசிக பக்தியைப் பற்றின உண்மையை உலகம் தெரிந்துகொள்வதற்காக இங்கு ஒரு விஷயம் தெரிவிக்கிறேன். ஸ்ரீதேசிக பக்தர்களான வித்வான்கள் இதை அவசியம் ஆழ்ந்து அவதானித்துக்கொள்ளவேணும். இத் தாதாசார்ஸ்வாமி 1946 ஆம் வருஷத்தில் [6, 7 வருஷங்களுக்குமுன்பு] ரூபகபரிசுத்தி யென்றொரு சிறு க்ரந்தமெழுதி திருப்பதியில் அச்சிட்டு வெளியிட்டிருக்கிருர். அது 'வசஸ்ஸுதா' விசாரபரம். "பாராசர்ய வசஸ்ஸுதாம்" என்கிற ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்தியில் ரூபகமா? உபமிதமா? என்று விசாரித்து

முடிவுசெய்ய எழுந்தார். அதில் 12ஆம் பக்கத்தில் தத்வடீகையில் தேசிகன் ஸாதித்திருக்கிற மூன்று காரிகைகளை யெடுத்தெழுதி **"इति श्रीवेङ्कटनाथीयतत्त्वटीकाग्रन्थाद्-उपन्यस्यते"** என்று முடித்து, உடனே அந்த காரிகைகளின் கருத்தை **"अयमाशयो लक्ष्यते"** என்று தொடங்கிப் பதினொரு வரிகளால் விவரித்து உடனே **"अत्र अस्त्येव बहु असामञ्जस्यम्"** என்று தேசிக திவ்ய ஸூக்திகளை **மிகவும் அஸாமஞ்ஜஸ** மென்று தூஷித்து முடித்திருக்கிறார். இது நாம் இந்திரஜாலமாகக்காட்டும் விஷயமன்று. தேவநாகர லிபியில் உலகமறிய அச்சிட்டு வெளியிட்டிருக்கிற புத்தகத்தில் பக்கலக்கமும் காட்டியிருக்கிறோம், ஒவ்வொருவரும் எடுத்துப்பார்க்கலாம். தத்வடீகையில் தேசிகன் நிஷ்கர்ஷித்த வொரு விஷயத்தில் **அஸ்த்யேவ பஹு அஸாமஞ்ஜஸ்யம்"** என்று துணிச்சலாக எழுதியிருப்பவர் இத்தாதாசார்ய ஸ்வாமி.

இதில் இன்னமொரு வேடிக்கையுமுண்டு. அதில் இவர் ஒவ்வொரு பாராவிலும் தலைமேல் பாணிநி:, தண்டீ, போஜராஜ:, ருத்ரட:, என்றிப்படி சிலருடைய பெயர்களைக் குறிப்பிடுகிறார். அவர்களுடைய உக்திகளையெடுத்து விமர்சிப்பதாகக் காட்டுகிறபடி. இந்த ரீதியில் தத்வடீகா ஸூக்திகளையெடுத்து விமர்சிக்குமிடத்தில் தலைமேல் வேதாந்த தேசிக: என்றோ தேசிக: என்றோ நிகமாந்தகுரு: என்றோ வேதாந்தாசார்ய: என்றோ ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்றோ மகுடமிட்டிருக்கவேணும். முன்னும்பின்னும் தண்டிக்கும் போஜனுக்கும் மகுடஞ்சூட்டியிருக்கின்ற இந்த ஸ்வாமி தத்வடீகா காரிகைகளை யெடுத்து விமர்சிக்கிற பிரகாணத்தில் ஒரு மகுடமுமிடவில்லை. ஏனென்றால், **தேசிக:** என்று மகுடமிட்டு எழுதினால் அதை தேசிக பக்தர்கள் ஊன்றிக்காண்பார்கள்; காணுமிடத்து தேசிக

தூஷணம் புலப்பட்டுவிடுமே............என்று ஏதோ சூது களைக்கருதி மகுடமிடாமலே விஷயத்தையெழுதி 'அத்ர பஹு அஸாமஞ்ஜஸ்யமஸ்தி' என்றுசிறந்த ஸம்பாவனை யோடு முடிவுகட்டியிருக்கிறார்.

தவிரவும், 'ஸ்ரீவேங்கடநாதீய தத்வடீகா' என்றெழுது கிறார். மேலே 19ஆம் பக்கத்திலும் "ஸ்ரீவேங்கடநாதேந ச" என்றும், 32ஆம் பக்கத்திலும் 'ஸ்ரீவேங்கடநாதஸ்ய' என்றும் எழுதுகிறார். ஸ்ரீவைஷ்ணவர்கள், தத்ராபி தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் தேசிகனைப்பற்றி இப்படி அவலீலை யாக எழுதியிருக்கக்கண்டதுண்டோ? நிகமாந்த மஹா தேசிக: இத்யாதிரீதியில் எழுதாமற்போனாலும் ஸ்ரீவேங்கட நாதார்ய: என்றுவது எழுதியிருக்கவேண்டாமா? எவ்வளவோ வெறுப்பினாலல்லவா அநுவதிக்கத்தகாத முறையில் எழுதியிருக்கிறார். "ஸ்ரீரங்கராஜ திவ்யாஜ் ஞாலப்த வேதாந்தாசார்யபத:" என்று ஸ்வாமிதாமும் பஹு மானித்துக்காட்டியுள்ள விருதான திருநாமத்தை விட்டிட்டு வழிப்போக்கரான ஒரு நபரைச் சொல்லுவது போல ஆர்யபதமும் ஆசார்யபதமுமில்லாமல் 'வேங்கட நாத:' என்று எழுதுவதும், அம்மஹாசார்யர் தத்வடீகை யில் மிகவும் அஸமஞ்ஜஸமாக எழுதிவைத்தாரென்பதும் எவ்வளவு அருவருக்கத்தக்க விஷயமென்பதை வித்வான் கள் விமர்சிக்கவேணும்.

அந்த தேசிக நிந்தா புஸ்தகம் வெளிவந்தபோது அடியேன் ஒரு உத்யோக நிமித்தமாகத் திருப்பதியில் இருந்தேன். 'மஹாசார்யஸூக்தியை இப்படியா தூஷித்து எழுதுவது? இது உமக்கு ஸ்வரூபமா?' என்று பல பண்டிதர்கள் முன்னிலையில் கேட்டேன். "அஸ்தாநேபி மூட பக்தியினால் கொண்டாடுகிற மூர்க்கர்களில் நான் சேர்ந்தவனில்லை; அத்யந்தம் அஸமஞ்ஜஸமாக எழுதப்

பட்டிருந்தால் அஸமஞ்ஜஸ மென்று காட்டாமல் வேறு எப்படி காட்டமுடியும்? என்றும், அப்படி அஸமஞ்ஜஸமாக எழுதுகிறவருடைய பெயரை கௌரவம் தோற்ற எழுது வதில் எனக்கு ஔசித்யம் தோன்றவில்லையென்றும் கூசாமல் கூறினார். அதையெல்லாம் இவர் இப்போது இல்லை செய்தாலும் புஸ்தகத்தில் தம்கையால் எழுதி அச்சிட்டிருக்கிற--உலகமெங்கும் பரவியிருக்கிற அஸமஞ்ஜ ஸோக்திகளை இல்லைசெய்ய முடியாதன்றோ.

இத்தாதாசார்ஸ்வாமி பலகாலமாய் அடிக்கடி சொல்லு வதென்ன வென்றால், 'ஸம்ப்ரதாய கோஷ்டியில் வேணு மானால் ஸயூத்யர்களுடைய தாபத்திற்காக தேசிகனைப் புகழ்வோம்; மற்றப்படி தந்த்ரார்த்தங்களை விமர்சிக்கு மிடத்தில் அஸமஞ்ஜஸமாகவே மனம்போனபடி யெழுதி வைத்திருக்கிறவரைப் புகழ்வதற்கு எப்படி மனம் வரும்?' என்றே நிர்ப்பயமாய்ச் சொல்லுவர். இப்படிப்பட்டவிவர் ப்ரதிவாதிபயங்கர குலதிலகரான ஸ்வாமியை தேசிக பக்தி ஹீனரென்றும் கபட பக்தி நாடகக்காரரென்றும் எழுதிக் கொண்டிருந்தால் என்ன அர்த்தம். கூலிக்கு மாரடிக்கிற கதையாய் மடம் ஸ்வாமிகள் ஸாதிக்கிற மாஸிகவேதனம் ஜரிக்க எதையாவது எழுதிவிடலாமென்று நினைக்கத் தகுமோ?

மேலும் இந்த தாதாசார்ஸ்வாமி திருவையாற்றிலிருந்த காலத்தில் 'அஹமேவபண்டித:' என்கிற ஒரு புதிய செருக்கினால் தேசிகனை கிள்ளுக்கீரையாகவே பேசிக் கொண்டிருந்தவர். யாதவாப்யுதயத்தில் (10—28.) "**उपवेद-मधीयुये**" என்றதை யெடுத்துக்கொண்டு **अधीयुः** என்ற ப்ரயோகத்தை தூஷித்துப் பேசிக்கொண்டிருந்தார். வித் யார்த்தி தசையிலிருந்த அடியேன்போல்வார் சிலர் அப் பயதீக்ஷிதருடைய வியாக்கியானத்தை யெடுத்துக்காட்டி

‘வாயை மூடிக்கிடவும்’ என்றேம். அதில் लिङ् என்று அச்சுத்தவருக விழுந்திருப்பதைப் பிடித்துக்கொண்டு ‘तदिदमन्धस्य जात्यन्धेन यष्टिर्दीयते என்று அவரையும் சேர்த்து வையத் தொடங்கிஞர். இப்படி பல விஷயங்கள் வித்வான்கள் பலருமறிந்தவையுண்டு. அவற்றையெல்லாமிவர் இப்போது ஆலாபம் செய்வராதலால் இவற்றை விட்டு விடுகிறேம். ஸ்பஷ்டமாக தத்வடீகா காரிகைகளை யெடுத்துக்காட்டி अत्रास्ति बहु असामञ्जस्यम् என்று சிலாலிகிதமாக்கி வைத்திருக்கிறுரே, இது பேர்க்கவும் போராதோ யன்றே.

ஸ்ரீ அண்ணங்கராசார்ஸ்வாமி தேசிகன்விஷயத்தில் நாலுகாரியங்கள் செய்திருக்கிறுர். (1) தேசிக ஸ்ரீஸூக்திகளை யெல்லாம் இன்னும் 200 வருஷகாலம் விளங்கும்படியாக ஆச்சரியமாய் முத்ரணம் செய்து வைத்திருக்கிறுர். (2) தேசிகனுடைய பல திவ்யஸூக்திகளுக்கு உலகம் கொண்டாடும் வியாக்கியானங்களை எழுதி வெளியிட்டிருக்கிறுர், வெளியிட்டும் வருகிறுர். (3) தேசிகன் விஷயமாக வடமொழியிலும் தென்மொழியிலும் ஸ்துதிகளைப்பணித்திருக்கிறுர். (4) தேசிகன் விஷயமாக வடமொழி தென்மொழிகளில் பிறர்பணித்த ஸ்துதிகளுக்கும் வியாக்கியானம் செய்து வெளியிட்டிருக்கிறுர். இந்த நால்வகைக் காரியங்களும் படபக்தி நாடகத்திலே சேர்ந்ததாக இருக்கட்டும். இந்த தாதாசார்ஸ்வாமி இப்படிப்பட்ட காரியங்களில் ஒன்றாவது செய்திருப்பதுண்டோ? இவரும் பலபுத்தகங்கள் இச்சநூம் அச்சிடுவதாக ப்ரசாரங்கள் செய்து வருகிறுரே. தேசிகன் விஷயத்தில் இன்ன கைங்கரியம் செய்தேனென்று ஒன்று காட்டுவரோ? वेङ्कटनाथः என்று எழுதுவதும் अत्रास्ति बह्वसामञ्जस्यम् என்றெழுதுவதுமான கைங்கரியம் வெகுசிறப்பாகச் செய்திருக்கிறுர் என்பது தவிர வேறுண்டோ? “ரகுவம்ச

விமர்சத்திலும் மேகஸந்தேச பராமர்சத்திலுமே இவர் போதைப் போக்கிக்கொண்டிருக்கத்தகும்" என்று ஒரு விவேகி எழுதியிருப்பதில் என்ன பிசகு?

தேசிகன் ஸ்ரீஸூக்தியைப் பச்சையாக தூஷித்த தோடும் நில்லாமல், தேசிக ஸ்ரீஸூக்திகளைப் பாராமல் மிகவும் ஹேயமாக இவர் செய்யும் ப்ரஸங்கங்களும் பல. அவற்றிலும் ஒன்றிரண்டு காட்டுவோம். ஸமீபத்தில் இவர் வெளியிட்ட உத்யாந பத்ரிகையில் [நந்தன ஸிம்ஹ மாஸ பத்ரிகையில்] அட்டையில் '**नग्नजित्पुत्री सत्या**' என்று ஏதோ எழுதியிருக்கிறார். இருளில் குழியில் விழுவது உலகிலுண்டு. நடுப்பகலில் விழுவதென்பது யாருடைய காரியம். அண்ணங்கராசார்ஸ்வாமி இவ்விஷயத்தில் முன்னமே தேசிக திவ்யஸூக்திகளையே யெடுத்துக் காட்டி யெழுதி யிருக்கிறார். அப்படியிருந்தும் அவற்றைப் பாராமலே தேசிகஸூக்தி விருத்தமாக இவர் எழுதிவருகிறார், உளறுகிறார். இதுவும் வித்வான்களால் அவசியம் விமர்சிக்கத் தக்கதாகையால் அண்ணங்கராசார்ஸ்வாமியின் நிரூபணங்களை இங்கு எடுத்துக் காட்டுகிறேன்.

## நப்பின்னைப் பிராட்டி

ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் கண்ணபிரானுக்கு வாய்த்த தேவிமார்கள் "தக்கார் பலர் தேவிமார் சாலவுடையீர்" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப்படியே எண்ணிறந்தவர்கள். "எண்ணிறந்த பெருந்தேவிமார்" என்றே பெரியாழ்வார் பாடுகின்றார். அப்படிப்பட்ட தேவிமார்களுக்குள் ருக்மிணிப் பிராட்டி தலைமை பெற்றவளென்று ஸ்ரீ விஷ்ணுபுராணம் கூறுகின்றது. '**राघवत्वेऽभवत्सीता रुक्मिणी कृष्णजन्मनि**— ராகவத்வே அபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி" என்று ஸ்ரீ பராசரபகவான் பணித்தது காண்க.

ஆழ்வார்களின் கோஷ்டியில் ருக்மிணிப் பிராட்டியைப் பற்றின பேச்சு மிகவும் ஸ்வல்பமாகக் காண்கிறது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் * அன்றங்கமர் வென்று உருப்பிணி நங்கையணி நெடுந்தோள் புணர்ந்தான் * என்று ஓரிடத்திலும், பெரியாழ்வார் * உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக்கொண்டு * உருப்பிணிநங்கை தன்னை மீட்பான் * என்றிரண்டிடங்களிலும், ஆண்டாள் * கண்ணாலங்கோடித்துக் கன்னி தன்னை * என்றோரிடத்திலும் ஆக இவ்வளவே ருக்மிணிப் பிராட்டியின் ப்ரஸ்தாவம் செய்திருக்கிறார்கள். நப்பின்னைப் பிராட்டியைப் பற்றிப் பேசியுள்ளவிடங்களோ வென்னில் பல நூற்றுக் கணக்கில் தேறுகின்றன. திருப்பாவையில் கண்ணபிரானைத் திருப்பள்ளியுணர்த்துவது நப்பின்னைப்பிராட்டி திருமாளிகையில் என்று வைத்தே ஆண்டாள் பாடியிருக்கிறாள்.

இப்பிராட்டிக்கு வடமொழியில் நீளா என்று திருநாமமென்பதாகத் திருப்பாவைத்தனியனை பட்டரருளிச் செய்த 'நீளாதுங்கஸ்தநகிரி தடஸுப்தம்' இத்யாதிச் லோகத்திலிருந்து தெரிகின்றது. இவ்வவதாரத்தில் ப்ரதாந மஹிஷியான ருக்மிணிப் பிராட்டியிருக்க அவளை விட்டு நப்பின்னையை ஆழ்வார்கள் ப்ரபலமாகக் கொண்டாடிக் கூறுவதற்கு யாது காரணமென்று ஆராய்ச்சி செய்யுமளவில், கண்ணபிரான் தனக்குத் தேஜஸ்கரமாக மிக விரும்பிய குலம் ஆய்க்குலமாகையாலும், இந்த நப்பின்னை அந்த ஆய்க்குலத்திலே தோன்றி எம்பெருமானுக்கு மஹிஷியாக வாய்த்தபடியாலும் இவளே அவனது திருவுள்ளவுகப்புக்கு மிகவும் லக்ஷ்யமாயிருந்தவள் என்று கருதியே ஆழ்வார்கள் நப்பின்னையைப் பற்றியே போற்றியுகந்து பேசுகிறார்களென்று தெரியவருகிறது. திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்தில் * ஆயனாகி யாயர்மங்கை வேயதோள் விரும்பினாய் * என்றருளிச்

செய்த பாசுரத்தின் மருமத்தைப் பிடித்துக் கூரத்தாழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் அற்புதமாக அருளிச்செய்யும் ச்லோக ரத்னமொன்று—"हे सुन्दरैकतरजन्मनि कृष्णमात्रे द्वे मातरौ च पितरौ च कुले अपि द्वे । एकक्षणादनुगृहीतवत: फल ते नीला कुलेन सदृशी किल रुक्मिणी च" என்பது. இதன் இன்சுவைப் பொருளை அண்ணங்கராசார்யஸ்வாமியின் ஸுந்தர பாஹுஸ்தவ வியாக்கியானத்திலே விரிவாகக் கண்டு கொள்க.

இந்த நப்பின்னைப் பிராட்டியின் வரலாறு எந்த புராணத்திலுள்ளதென்று பலர் விமர்சிப்பதுண்டு; ஸ்ரீ விஷ்ணு புராணத்திலாவது ஸ்ரீ பாகவதத்திலாவது இவளைப் பற்றிக் கூறியிருப்பதாக நமக்குப் புலப்படவில்லை. வேதாந்த தேசிகன் பணித்த யாதவாப்யுதயத்தில் நான்காவது ஸர்க்கத்தில் (ச்லோ 98.) "दिशागजानामिव शार्कराणां शृङ्गाग्रनिर्भिन्नशिलोच्चयानाम् स तादृशां बाहुबलेन कण्ठान् निपीड्य लेभे पणितेन नीलाम्" * என்றுள்ளது. இவ்விடத்து வியாக்கியானத்தில் அப்பய தீக்ஷிதர்—"वृषभमर्दनरूपेण शुल्केन नीलां नाम कन्यां लेभे एवं हरिवंशे कथा; — विदेहनगरे यशोदानुजः कुम्भको नाम गवांपतिरासीत् । तस्य व्रजे कालनेमेरसुरस्य सुताः सप्त प्राग्भगवता निर्जिताः पूर्ववैरमनुस्मृत्य कृष्णापचिकीर्षया वृषभरूपेण न्यवसन् । तैश्च गोकुलविशालवत्सनिर्भञ्जनलक्ष्यभक्षणादिषु उपद्रवेषु क्रियमाणेषु स्वयं दमयितुमशक्येषु च तेषु, य एषां दमयिता तस्मै स्वकन्यां नीलां दास्यामीति कुम्भकः प्रतिजज्ञे । तत्र च कदाचित् कृष्णस्समागत्य तान्मारयित्वा नीलां जग्राहेति ॥" என்று ஸ்பஷ்டமாக வெழுதியுள்ளார். இதனால், நீளாதேவி யென்கிற நப்பின்னைப் பிராட்டியானவள் ஏழ்விடைசெற்றுத் திருவாய்ப்பாடியிலேயே மணந்து கொள்ளப்பட்டவொரு கோபகன்னிகை யென்பது நிஸ்ஸந்தேஹமாக விளங்காநின்றது.

ஸ்ரீ பாகவதத்தில் தசமஸ்கந்தத்தில் ஐம்பத்தெட்டாம் ஸர்க்கத்தில்— * **नग्नजिन्नाम कौसल्य आसीद्राजाऽतिधार्मिकः तस्य सत्याऽभवत्कन्या देवी नाग्नजिती नृप। न तां शेकुर्नृपा वोढुम् अजित्वा सप्त गोवृषान्** * இத்யாதி ச்லோகங்களாலே ஒரு கதை கூறப்பட்டிருக்கின்றது; ஸத்யா என்கிற கன்னிகையை எருதேழடர்த்துக் கண்ணபிரான் மணந்து கொண்டதாக இங்குச்சொல்லப்படுகிறது. இதைக் கண்ட தாதாசார் இந்த ஸத்யா என்பவளே நப்பின்னைப் பிராட்டியென்றும் இவளைப் பற்றியே ஆழ்வார்கள் ஆங்காங்கு அருளிச் செய்தார்களென்றும் எழுதிவிட்டார். இது மிகுந்த மருளினாலாயது. இவள் க்ஷத்ரிய குமாரியே யொழிய ஆய்மகள் அல்லள். ஆழ்வார்கள் 'ஆயர்மங்கை, ஆய்மகள், குலவாயர்கொழுந்து' என்றே பலவிடங்களிலு மருளிச்செய்வதாலும் ஆசாரியர்களும் அப்படியே யருளிச்செய்வதாலும் தேசிகனும் திருவாய்ப் பாடியில் நடந்த சரிதைகளில் இதைப் பேசியிருக்கையாலும் க்ஷத்ரிய புத்ரியான ஸத்யையை நெஞ்சாலும் நினைக்க இங்கு ப்ரஸக்தியில்லை. யாதவாப்யுதயத்திலேயே மேலே பதினொன்காவது ஸர்க்கத்தில் (ச்லோ. 75.) * **स्वदिव्यदेहप्रकृतीरिवा पराः पराश्च देवीरवृणीत पञ्च सः** * என்றவிடத்தில் சொல்லப்பட்டுள்ளது ஸத்யாபரிணயம். அந்த ஸத்யையை நப்பின்னை யாக்குவதற்கு ஔசித்ய லேசமும் கிடையாது.

ஸத்யையும் எருதேழடர்த்து மணந்து கொள்ளப்பட்டவளாகையாலே இவளும் ஆழ்வார்களால் பாடப்பட்டாளென்று கொண்டாலென்ன? என்று கேள்வி கேட்பவர்கள் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களாக இருக்க நியாயமில்லை.

## யச்சப்தப்ரதி நிர்தேசம்

ஸம்ஸ்க்ருதரசனைகளில் யச்சப்தப்ரயோகம் முன்னே

செய்யப்பட்டால் அதற்கு ப்ரதி நிர்தேசமான தச்சப்த ப்ரயோகம் பின்னே அவசியம் செய்யப்படவேண்டு மென்றும், அப்படி செய்யப்படாவிடில் அது பெரிய அவத்யமாகு மென்றும் தாதாசார்ஸ்வாமி எழுதியிருந் தார். இது விஞ்ஞான நிபந்தனை யென்றும், மஹான் களின் பிரயோகங்களில் இரண்டு விதமாகவும் காணப் படுகிறதென்றும் அண்ணங்கராசார்ஸ்வாமி தெரிவித் திருக்கிறார். இதற்குப் பல நிதர்சனங்களும் எடுத்துக் காட்டியிருக்கிறார். மஹாகவியான அ ர சா ணி பா லை. வேங்கடாத்வரியியற்றிய வரதாப்யுதய சம்புவில் * துண்டீராக்யம் மண்டலமஸ்தி ஸ்ப்ருஹணீயம் * என்ற ச்லோகத்தில் * தத்ரைகம் யத் கர்ம ஸஹஸ்ரம் பலதீதி * என்றவிடத்தையும் மற்றும் பல பல வைதிக ஸ்தலங்களையு மெடுத்துக்காட்டி யிருக்கிறார். அதைக் கண்ட ஒரு பண்டிதர் "தத்ரைகம் யத் கர்ம" என்ற விடத்தில், யத் என்பதற்கு 'யஸ்மாத் காரணாத்' என்று பொருள் சொல்லப் பொருந்தாதோ வென்று கேட்டார். அந்தப் பொருள் வக்தாவுக்கு விவக்ஷிதமாகில் ச்லோக ஸந்நிவேசம் இப்படியிராது; * यत्तत्रैकं कर्म सहस्रं फलतीति * என்றே யிருக்குமென்று நாம் விடை கூறினோம். அவர் ப்ராமாணிகராகையாலே அதை அந்தரங்கத்ருப்தியுடன் இசைந்துகொண்டு, 'இருந்தாலும், யஸ்மாத்காரணாத் என்று பொருள் கொள்பவர்களை நாம் தீவ்ரமாகக் கண்டிக்க முடியாதன்றோ? என்றார். உடனே முகுந்த மாலையில் "यः कान्तामणिरुक्मिणीघनकुचद्वन्द्वैकभूषामणिः श्रेयो देवशिखामणिः दिशतु नो गोपालचूडामणिः" என்ற ச்லோகத்தை எடுத்துக்கூறி இதில் யச்சப்த ப்ரதிநிர்தேசமான தச்சப்தம் எங்கிருக்கிறது? சொல்லீர்-என்றேன். இது போன்ற பலச்லோகங்களை அவரும் ஞாபகப் படுத்திக் கொண்டு எடுத்துரைத்து அகன்றார். * ஸ்ரீமத் தாதாசார் ஸ்வாமி இப்படிப்பட்ட விஷயங்களில் விவாதத்தை வளர்த்த வேண்டிய அவச்யமே கிடையாது. முக்கியமாக நேர்ந்த சர்ச்சைகளிலிருந்து விலகி இப்படி வேறு வேறு வழிகளில் விவாதங்களை வளர்த்துக் கொண்டு போவது எதற்காக?

ஸ்ரீமான் உ.வே. வித்யாவாரிதி மதத்ரயநிரூபக புதுக்கோட்டை ஸம்ஸ்தான தானாதிகாரி (ரிடையர்டு) காவி. ரங்காசார்யஸ்வாமியின் ஸ்ரீமுகம்.

श्रीमन्नृसिंहप्रियपत्रिकायां तैस्तैर्बुधैर्यद्यदहो वृथैव । विलिख्यते तत्तदसौ निरस्यत्यण्णङ्करार्यो महितैः स्वसूक्तैः ॥ प्रामाणिकीं पद्धतिमेष विद्वान् जहाति नैवेषदपीति सर्वे । प्रामाणिकाः प्राज्ञवराः प्रशंसन्त्यन्यानधन्यान्प्रति का कथा नः ॥ ईडाह्वयग्रन्थसदर्थतत्त्वम् अण्णङ्करार्याह्वयसूरिरेकः । जानाति नान्यो भुवि कोऽपि सत्यं स्वच्छन्दमर्थान् हि परे वदन्ति ॥ विद्वद्वराणामपि हेतुभेदैस्संजायते लेखनमन्यथैव । अण्णङ्करार्योक्तिगणैः प्रबुद्धास्तेऽपि क्षमां प्रार्थ्य भवन्ति धन्याः ॥ एवंगोपालार्यप्रभृतिषु विद्वत्सु दृश्यते तदिदम् । तेषां प्रामाणिकतामभिनन्दति सत्यमखिलमपि भुवनम् ॥ महागजाः पलायन्त इतिनीतिविदोऽप्यहो । कतिचिन्मशकप्राया विनिन्दन्ति वृथाग्रहात् ॥ तादृशानामसभ्यानामसूयाविलचेतसाम् । अरण्यरुदितप्रायैर्वचोभिः कस्य का क्षतिः ॥ यथार्थवक्ताऽहमसूयुभिश्चेत् विनिन्दितस्स्यां न विषण्णहृत् स्याम् । तत्त्वार्थमेव ह्यवदं प्रसिद्धम् इत्येव हृष्येयमतीव सत्यम् ॥

(இந்த ச்லோகங்களின் கருத்துச் சுருக்கம்)

ந்ருஸிம்ஹப்ரியா என்னும் பத்ரிகையில் அவரவர்களால் வீணாக எழுதப்படுவதையெல்லாம் அண்ணங்கராசார்யர்ஸ்வாமி தமது சிறந்த ஸூக்திகளால் நிரஸிக்கிறார். இந்த ஸ்வாமி ப்ராமாணிக பத்ததியைச் சிறிதும் விடுவதில்லையென்று ப்ராமாணிக பண்டிதர்கள் கொண்டாடுகிறார்கள். மற்றவர்களைப்பற்றி நமக்கென்ன? ஈடு முப்பத்தாறாயிரப்படியின் உண்மைப் பொருளை அண்ணங்கராசார்யர்ஸ்வாமியொருவரே உள்ளபடியறிந்தவர். மற்றவர்கள் மனம் போனபடி பொருள் சொல்லுபவர்களே. சிறந்த வித்வான்களுங்கூடச் சில காரணங்களினால் மாறுக

எழுத நேர்ந்துவிடுகிறது. அவர்கள் பிறகு அண்ணங்கரா சார்யஸ்வாமியின் வியாஸங்களினால் விழித்துக்கொண்டு க்ஷமித்தருள வேணுமென்று பிரார்த்தித்து நிற்கிறார்கள். ஸ்ரீ உவே. ஏ. வி. கோபாலாசார்யஸ்வாமி முதலான வித்வான்களிடத்தில் இத்தன்மையைக் காணலாம். அப்படிப் பட்ட மஹான்களின் ப்ராமாணிகத்வத்தை உலகமெல்லாம் மெச்சுகிறது. "மஹாகஜா: பலாயந்தே மசகாநாம் து! கா கதி:" என்பதை யறிந்தவர்களுங்கூட வீணான ஆக்ர ஹத்தினால் நிந்திக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களின் நிரர்த்தக வாக்ஜாலங்களினால் யாருக்கு என்ன நஷ்டம்! யதார்த்தத்தைத் தெரிவிக்கின்ற அடியேன் சில அஸூயுக்களால் நிந்திக்கப்பட்டேனாகில் அதற்காகச் சிறிதும் வருந்தமாட்டேன். எல்லாரு மறிந்த உண்மையைத் தானே நாம் வெளியிட்டோமென்று உள்ளபடி மிகவும் ஸந்தோஷமே யடைந்திடுவேன்.

## தேரழுந்தூர். பண்டித, சௌரிராஜய்யங்காருடைய விஞ்ஞாபனம்

தேரழுந்தூரென்னுமிந்த திவ்யதேசத்தில் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸபை யொன்று ஏற்பட்டு அதன் மூலமாக புஸ்தகாலயமுமொன்று ஸ்தாபிதமாகி அதன் வாயிலாக எல்லாரும் எல்லாப் பத்ரிகைகளையும் ஸகல ஸஞ்சிகைகளையும் எளிதாக வாசிக்க ப்ராப்த மாகிறது. ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா, ஸ்ரீ ராமாநுஜன், அம்ருதலஹரீ, ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம், வைதிக மனோஹரா முதலான பத்ரிகைகளைப் பலரும் படித்து விஷயங்களை யறிந்து கொள்ளுகிறார்கள். ஸ்ரீ அண்ணங் கராசார்ஸ்வாமியால் எழுதப் படுகின்ற வியாஸங்களை வாசிக்கும்போது இஷ்டர்கள் அநிஷ்டர்கள் என்கிற வாசி யில்லாமல் எல்லாரும் உகந்து பேசுவது வழக்கம். இதற்கு இரண்டு காரணங்கள். (1) ஸ்வாமி யெழுதும்

விஷயங்கள் அல்பஜ்ஞானிகளுக்கும் கண்ணாடி போல் விளங்கும்படி எளிதாக எழுதப்படுகின்றன. (2) மனம் போனபடி எதையாவது எழுதி விடுவதென்று இல்லாமல் ப்ரமாணயுக்திகளை நன்றாக விளக்கியே யெழுதப்படுகின்றன. பிறருடைய வியாஸங்கள் தலைசுற்றலாகவே யிருப்பதால் அவற்றிலிருந்து விஷயங்களை க்ரஹிப்பதும் சிரமம். சில க்ரஹித்தாலும் பொருத்தமாயிருப்பதில்லை. தூஷிப்பவர்களின் மனதுக்கும் இது தெரிந்தே யிருக்கிறது.

இந்த திவ்ய தேசத்திற்குப் பெரிய திலகமாக விளங்கும் மஹா வித்வச் சிகாமணியான ஸ்ரீ உ. வே. காளி. ரங்காசார்யர்ஸ்வாமி பெரும்பாலும் நாடோறும் அண்ணங்கராசார்ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்திகளை உகந்து கொண்டாடுவது வழக்கம். அந்த ஸ்வாமி சிலமாத காலமாய் தம் திருக்குமாரரிடம் சென்று கரக்பூரில் வாழ்கிறார் அங்கிருந்து சென்ற மாதத்தில் சில ச்லோகங்களை யெழுதியனுப்பி இவற்றை பிரசுரம் செய்விக்க வேணு மென்று நியமித்திருந்தார். அதைப் பார்த்த பலரும் அடியேனும் 'யதார்த்தவாதி பஹுஜநத்வேஷீ' என்பதை நினைத்து அதை ப்ரசுரம் செய்யாமலே யிருந்து அந்த ஸ்வாமிக்கும் இவ்வபிப்ராயத்தைத் தெரிவித்தோம். உடனே ஸ்வாமியிடமிருந்து ஸ்ரீ முகம் கிடைத்தது; வேதத்தில் "यच्छ्रेयसा च पापीयसा च समानं कर्म कुर्वन्ति" என்று சொல்லப்பட்டிருக்கிறது; அது உங்களுக்குத் தெரியாது; அந்த ச்ருதியையும் சேர்த்து அந்த ச்லோகங்களை அவசியம் ப்ரசுரம் செய்ய வேண்டியதென்று கண்டிப்பாக நியமித்திருந்தார். அதை பகவதாஜ்ஞையாகக் கொண்டு இதில் ப்ரசுரம் செய்யலாயிற்று.

பிராட்டியின் உபாயத்வம், ப்ரபத்தியின் உபாயத்வம்

போன்ற ஸம்பிரதாய விஷயங்களில் சாஸ்த்ரீய சர்ச்சை நடந்து கொண்டிருந்தால் அதில் என்னைப் போன்றவர்கள் தலையிட அவகாசமே யிராது. அந்த சர்ச்சைகளில் ஸ்ரீ உ. வே. திருவரங்கம் திருமலை தாதாசார்யர்ஸ்வாமி ஒருவிதமாக முடிவுகட்டிவிட்டார். பிராட்டிக்கோ ப்ரபத்திக்கோ ப்ரதானமான உபாயத்வமில்லை; அப்ரதான மாகவே அது உள்ளது என்றார். அவ்வளவோடு சர்ச்சை ஒழுங்காய் விட்டது. ஆனாலும் விவாதம் ஓயவில்லை.

ஒரு முக்கியமான விஷயம் எல்லோரும் அவசியம் கவனிக்கத் தெரிவிக்கிறேன். சென்ற ஐப்பசி மாதத்தில்" ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையானது ஆசார்ய ஜயந்தி மலராக உரு வெடுத்து வெளிவந்தது. அதை ஸ்ரீ அண்ணங்கரா சார்ஸ்வாமி ஸ்ரீ ராமாநுஜன் 46-ல் விமர்சித்திருக்கிறார். அந்த விமர்சம் கலாபேத ஸம்ப்ரதாய வைஷம்யாநுபந்தி யன்று. லோகாபிராமமான விமர்சமே. அந்த விமர்சத்தில், மஹாப்ராஜ்ஞரான (திருச்சி) ஏ. வி. கோபாலாசார்யஸ்வாமி யின் ஒரு வியாஸமும் விமர்சிக்கப் பட்டது. அதைக் கடாக்ஷித்தருளின அந்த ஸ்வாமி உண்மையில் மஹாப்ராமாணி கராகையாலே தமக்கு நேர்ந்த தவறுதலை யங்கீகரித்து க்ஷமையை வேண்டுவதாக ஒரு ஸ்ரீ முகம் எழுதிக் கொண்டார். அது அம்ருதலஹரீ பத்ரிகையில் வெளி வந்திருக்கிறது. மற்ற சில பண்டிதர்களின் வியாஸங்களை விமர்சித்து அண்ணங்கராசார்ஸ்வாமி எழுதியிருப்பவை களுக்கும் அந்தந்த பண்டிதர்கள் இவ்விதமாகவே க்ஷமையை வேண்டிக் கொள்ள வேண்டியது தவிர வேறு புகலில்லை. ஆனால் அவர்களிடத்தில் ப்ராமாணிகத்வம் குடி புகாமையினாலே க்ஷமையை வேண்டிக் கொள்ள அந்தரங்கம் இடம் தரவில்லை. ஆனாலும் விஷயத்தில் வாய் திறக்க முடியாமையினாலே வாளாவிருக்கிறார்கள். அதையும் ஒரு வாறு ப்ராமாணிகத்வத்தில் பரிகணனம் செய்து கொள்ளலாம். அது நிற்க,

அந்த ஸ்ரீ ராமாநுஜன் 46-ல் "எம்பெருமானும் பகவச்சப்தமும்" என்கிற முதல் வியாஸமானது ஒருவருடைய வியாஸத்திற்குக் கண்டனம் போல் அவதரிக்கவில்லையாகிலும், ஸ்ரீ மத் திருமலை தாதாசார்ஸ்வாமியின் ஒரு வியாஸத்திற்கு மறுப்பாகவே நிற்கிறது. அதை அவர் கண்டதும் கைகூப்பி யிருக்கவேண்டியது தவிர வேறில்லை. லேசாக அப்படி யிருந்துவிட முடிகிறதா? ஆயுள் உள்ள வரையில் விட்டேனு? என்பவராதலால் இக் கார்த்திகை ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியாவில் அதற்கு ப்ரதிவாதம் செய்திருக்கிருர்.

ஸ்ரீ பாஷ்யத்தின் ஆரம்பத்தில் "**सर्वत्र बृहत्त्वगुणयोगेन हि ब्रह्मशब्दः । बृहत्त्वं च** ....................." இத்யாதி ஸ்ரீ ஸூக்திகளின் தாத்பர்யத்தைச் சுருக்கமாக அண்ணங்கராசார்ஸ்வாமி எழுதியிருந்தார். அதற்கு மறுப்பெழுதுகிற தாதாசார்ஸ்வாமி "**அநவதிகாதிசயம்**" என்ற பதத்திற்குச் சரியான பதவுரை எழுதப்பட வில்லையென்றும், '**தஸ்மாதந்யத்ர**' என்ற பதங்களின் பொருள் ஸமஞ்ஜஸமாக இல்லை யென்றும், "**பகவச்சப்தவத்**" என்ற பதத்தின் பொருளும் ஸமுசிதமாகவில்லை யென்றும் எழுதி 'ஆபாதத்ருஷ்டியும் அதிஜுகுப்ஸநீயமாயிருப்பதற்கு இவ்வளவு சொன்னேம்' என்கிருர். இது அப்படியேயிருக்கட்டும். இதைப்பற்றின விசாரம் பிறகு ஆகும். இந்த தாதாசார்ஸ்வாமி ஸ்ரீ பாஷ்ய பங்க்தியை உதாஹரிக்கும் போது "**बृहत्त्वं च स्वरूपतो गुणतश्च यत्रानवधिकातिशयं सोऽस्य मुख्यार्थः**" என்பதாக எடுத்துக்காட்டியிருக்கிருர். ஸ்ரீ பாஷ்யபங்க்தி இப்படிதானு வென்பதை ஸ்ரீபாஷ்யாதிகாரிகள் காணவேணும். (ஸ்வரூபத:) என்றதும் பிசகு; (குணத:) என்றதும் பிசகு; (முக்க்யார்த்த:) என்றதும் பிசகு, க்ரமேண— ஸ்வரூபேண குணை: முக்க்யோர்த்த: என்றே ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்தி

கள். ஸ்ரீ பாஷ்யபங்க்தியை மாற்றுவதற்கு இவரா அதிகாரி? मुख्योऽर्थः என்பதும் मुख्यार्थः என்பதும் பர்யாயமென்று இவருடைய ப்ரமம். இது க்ராந்திகசைலியை அடியோடு அறியாமை. முக்யார்த்த: என்பது பஹுவ்ரீஹியை ஸஹிக்குமதாகையாலே அந்த ஸமாஸத்தின் ப்ரமத்திற்கு ஆஸ்பதமான ஸமஸ்த ப்ரயோகத்தை விட்டு வ்யஸ்த ப்ரயோகம் செய்வதே பரிபூர்ண வ்யுத்பந்நர்களின் நடை. அந்த விஷயம் எப்படியாவது இருக்கட்டும். அதில் விவாதத்தை வளர்த்திக் காடுபாய வேண்டாம். பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியை ரேகாமாத்ரமும்—அணுமாத்ரமும் மாறுபடுத்தாமல் உள்ளது உள்ளபடியே காக்கவேண்டியதன்றோ நம் கடமை. அண்ணாஸ்வாமி பதவுரையெழுதவந்திலர்; கருத்தே காட்டினார். இவர் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளைத்தாம் வதம் செய்பவர் என்பதை ஒவ்வொரு வியாஸத்திலும் வ்யக்தமாகக்காட்டிக்கொண்டு திண்டாடுகிறார். "திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோக ஹிதைஷிணீ" என்று ஸுப்ரஸித்தமான ச்லோகமே இவரது வாயிலும் கையிலும் விபரீதமாக வந்ததென்றால் ஸ்ரீபாஷ்யாதி ஸூக்திகளைப் பற்றிச் சொல்லவும் வேணுமோ? ஒன்றையும் ஊன்றிப் பாராமலே கைபோனபடி யெழுதி விடுவதும் பிறகு அதை ஸமர்த்திக்கப்பத்தெட்டு பக்கம் எழுதுவதும் வீணாரவாரம் செய்வதுமே இந்த தாதாசார்ஸ்வாமியின் இயல்பாகவுள்ளது. ஸ்ரீகாஞ்சீ பட்டப்பா ஸ்வாமியின் ஸுபாஷித நீவீ வியாக்கியான முத்ரண விமர்சத்திலிருந்தே இவருடைய விபரீத ஜ்ஞான வைபவம் ஸ்ரீமத் வித்வான் இளங்காடு, ரங்காசார்யஸ்வாமி முதலானோருடைய ஸூக்திகளால் உலகறிய நின்றது.

இப்போது நாமெடுத்துக்காட்டிப் இந்த வியர்யாஸத்திற்கு இவர் உடனே பதில் எழுதிவிடுவர் "அஸ்மா

கூனும் அர்த்தர்யேவ, ந து சப்தரி" என்றுப்போலே எழுதிவிடுவர். இப்படிப்பட்ட அஸமஞ்ஜஸங்கள் தவிர வேறொரு ஸாரமுமில்லாத இவருடைய விபிரலங்களைத் தாங்குவதற்கென்று ஒரு பத்ரிகை ஏற்பட்டிருப்பதுதான் ஆச்சரியம். மடத்துச்சாமிகள் சிறந்த ஸ்ரீபாஷ்யாதிகாரிகளல்லவா? அபரிமிதமான பணத்தைச் செலவழித்து நடத்தப்பட்டுவருமொரு பத்ரிகையில் இப்படிப்பட்ட விபரீதங்கள் புகுவது ஜுகுப்ஸநீயமென்பதை அவர்கள் அறியமாட்டாதவர்களா? ஒரு ரஸிகர் சொன்னார்—நம்மாழ்வார் திருவாய்மொழியில் "உலகோவுறங்குமே" என்றார்; உலகம் உறங்கவில்லை; மடந்தானுறங்குகிறது—என்று.

அண்ணங்கராசார்ஸ்வாமி இந்த தாதாசார்ஸ்வாமிக்காகவே வெளியிட்டிருக்கிற **அத்புத சக்தி** யென்னும் அத்புதக்ரந்தத்தில் (பக்கம் 19ல்) ஒரு கதையெழுதியிருக்கிறார்; இவர்க்கு மிகவும் ஏற்றதான அதையெடுத்துக்காட்டிவிட்டு, அடியேனும் ஒரு கதை யெழுதிவிட்டு இக்கட்டுரையை முடித்துக்கொள்ளுகிறேன்;—அந்தக்கதையாவது:— "கலியாண முஹூர்த்தத்திற்கு நாளிட்டுத் தரும்படி ஒரு யதாஜாதன் ஒரு புரோஹிதரிடம் வேண்டிக்கொண்டான்; அவர் ஏதோவொரு பஞ்சாங்கத்தைத் தவறாகப்பார்த்து 'பங்குனிமீ 14உ நல்ல நாள்' என்று தெரிவித்தார். அந்த யதாஜாதன் அப்படியே குறிப்பிட்டு உற்றுருறவினர்க்கு சுப பத்திரிகை அனுப்பிவிட்டான். ஒருவர் கவனித்துப் பார்த்ததில் அந்நாள் க்ருத்திகையும் அமாவாஸ்யையும் சனிக்கிழமையும் மரணயோகமுங் கூடியிருந்தது. உடனே ஓடிவந்து 'இதென்ன, இப்படி விபரீதமான நாளை யார் உமக்கு இட்டுக் கொடுத்தது?' என்று கேட்க, அவன் உண்மையில் திதிவார நக்ஷத்ர நன்மை தீமைகள் ஒன்றுமறியாதவனாகையாலே புரோஹிதரிடம் வந்து 'தாங்களிட்டுக் கொடுத்த நாள்

நல்லதன்று' என்கிறார்களே யென்றான். உடனே புரோஹிதர் பஞ்சாங்கமெடுத்துப் பார்த்தவாறே முன்பு தாம் பார்த்தது வேறொரு வருஷத்தியதென்றும் அநவதாநாத் தவறிப்போய் விட்டதென்றும் உண்மை தெரிந்து கொண்டார்; ஆனாலும் தமது அசட்டுத்தனத்தை ஒப்புக்கொள்ள மனமில்லாமல் ஒரு சூது செய்யத் தொடங்கினர்; "நல்ல நாளன்று என்று உன்னிடம் சொன்னவரை இங்கு அழைத்துவா; நான் எது கேட்டாலும் அவர் ஆமாம் ஆமாம் என்றே ஒப்புக்கொள்ளும்படி செய்துவிடுகிறேன் பார்" என்று சொல்லிப்போகவிட்டார். உடனே அவரை யழைத்துக்கொண்டு வந்தானவன். அவரை நோக்கிப் புரோஹிதர் கேட்கிறார்;—(வினா) பங்குனிமீ 14௳ அமாவாஸ்யை தானே. (விடை) ஆமாம். (வினா) அன்று கிருத்திகை தானே. (விடை) ஆமாம்; (வினா) அன்று சனிக்கிழமை தானே. (விடை) ஆமாம். (வினா) அன்று மரணயோகந்தானே. (விடை) ஆமாம். (வினா) நான் கேட்டால் எதையும் ஆமாம் ஆமாம் என்கிறீர்; இவனிடம் போய் (அல்ல அல்ல) என்கிறீராமே, ஏன்? इति ॥

இதற்குமேல் அவர்க்கு ஒன்றும் பதில் சொல்லத் தோன்றவில்லை. நம்மால் இவர்க்கு பதில் சொல்லிப் பிழைக்கமுடியாதென்றும் சிக்கன வெண்ணி ஒன்றும் சொல்லாமல் போய்விட்டாரென்று ஸ்ரீமத்தேரழுந்தூராண்டவன் ஒரு கதை ஸாதிப்பது கேட்டதுண்டு. அது தான் இங்கு ஞாபகத்திற்கு வருகிறது. "உங்களுக்குக் கால கூடமான பிரமாணங்காணுமிது" என்று நாம் எந்த ப்ரமாணங்களைக் காட்டுகிறோமோ அவற்றைப் பற்றி இவர்கள் ஆராய்ந்து விவரிக்கவேண்டியிருக்க அதைவிட்டு அதை தங்களுக்கு அநுகூலம் போலவே பாவனை காட்டி 'அவற்றைக்காண்க" "அதைக் கவனிக்கவேண்டியது" 'அதை உற்று நோக்க வேண்டியது" என்று எழுதிவிட்

டால் எனனாகும்? விவரித்த கதையில் புரோஹிதருடைய ஸ்தானத்தையே இவர்கள் ஆச்சரியமாக அலங்கரிப்பவர் களென்பதை எளிதாகக் கண்டறியவல்ல "விவேகிகள் ஆங்காங்கு இல்லாமற் போகவில்லை." इति ॥

ப்ரஸங்காத் மற்றொரு கதையும் கேளுங்கள். ஒரு ஜம்பக்காரன் நாலைந்து நண்பர்களுடன் சிற்றுண்டிச்சாலை யில் புகுந்து பத்தெட்டு ரூபாய்க்கு பக்ஷணங்கள் வாங்கி யுண்டு காசு கொடாமலே கிளம்பிச்சென்றான். அவனு டைய சொக்காயையும் தலைகுட்டையையும் கண்டு மயங்கி நின்ற அந்த உணவுச் சாலைத்தலைவன் 'வேலைக்காரர்களி டம் காசு கொடுத்திருப்பன்' என்றெண்ணி வாளாவிருந் தான். பிறகு காசு கொடுபடவில்லை யென்றறிந்து ஓடிச் சென்று 'ஐயா! காசு கொடாமலே போகிறீர்களே' என் றான். பிறகு நடந்த ஸம்வாதம்;

உண்டவன்—எதற்காக காசு?

உணவிட்டவன்—எங்கள் சிற்றுண்டிச்சாலையில் வந்து ஸாப்பிட்டீர்களே, அதற்காகத்தான் காசு.

உண்டவன்—என்ன ஸாப்பிட்டோம்?

உணவிட்டவன்—இட்டிலி, லட்டு, தோசை, வடை, பொங் கல், புளியோரை;

உண்டவன்—ஸாப்பிட்டோமையா ஸாப்பிட்டோம்; அதற் காக என்ன?

உணவிட்டவன்—அதற்குக் காசு கொடுங்கள்.

உண்டவன்—காசு எதற்காக?

உணவிட்டவன்—பலஹாரம் ஸாப்பிட்டீர்களே அதற்காக.

உண்டவன்—என்ன பலஹாரம் ஸாப்பிட்டோம்.

உணவிட்டவன்—பொங்கல், புளியோரை, லட்டு, இட்டிலி.

உண்டவன்—ஸாப்பிட்டோமையா ஸாப்பிட்டோம். அதற்காக என்ன? என்றுதானே நான் கேட்கிறேன்.

உணவிட்டவன்—அதற்காகக் காசு கொடுங்களென்கிறேன்.

உண்டவன்—காசு எதற்காக?

உணவிட்டவன்—எங்கள் போஜனசாலையில் வந்து ஸாப்பிட்டீர்களே? அதற்காக.

உண்டவன்—என்ன ஸாப்பிட்டோம்.

உணவிட்டவன்—இவையிவை ஸாப்பிடவில்லையா?

உண்டவன்—ஸாப்பிட்டோமையா ஸாப்பிட்டோம். அதற்கென்ன?

ஆப்தர்களே! இந்த கதை ஓயுமா வென்று பாருங்கள். இப்படியே நம் தாதாசார்ஸ்வாமியின் கதையும் ஓயாத கதையே. இனி இவர்க்குப் பெயர் "ஸாப்பிட்டோமையா". அர்த்தமில்லாத சப்தராசிகளையே அடுத்தடுத்து எழுதுவர். ஓயாமல் ப்ரதி சப்தம் செய்துகொண்டேயிருக்கிறேனென்று இவருடைய ப்ரதிஜ்ஞையாம் நடக்கட்டும்

**தேசிக பக்திதத்வம் முற்றிற்று.**

